கிருரே, அதைத் தூக்கியெறிய வேண்டியதென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதி யிருக்கிருரே அதைத் தூக்கியெறிந்தீரா?

**விடை:**—ஸ்வாமி யெழுந்தருளியிருந்தால் அவரைத் தூக்கியெறியலாம்; அவருடைய உக்தியைத்தான் தூக்கியெறியவேண்டும்படி அண்ணுவின் நிருபண மிருந்தது. என்செய்வேன்? ஆசார்யோக்தி திரஸ்காரபாபம் அபரிஹார்யமாயிற்று.

7. **விஞ:**—ரசநாநுபபத்த்யதிகரணத்தில் *விப்ரதிஷேதாச்ச* என்கிற ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்தில் "பந்தமோக்ஷஸாதநாநுஷ்டாநம் மோக்ஷஞ் ச ப்ரக்ருதேரேவ— இத்யாஹு:" என்றிருப்பதில் "இங்கு இதிபதம் இருக்கத் தகாதென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்; த்விதீயையிருக்குமிடத்தில் அது இருக்கக்கூடாதாகையால்" என்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிருரே; அந்த இதியை யெடுத்தெறிந்துவிட்டீரா?

**விடை:**—யதியிருந்தால் ஒருவாறு எடுத்தெறியலாம்; இதியின் உபபத்தியை அண்ணு வெகு ஸமஞ்ஜஸமாக நிரூபித்திருப்பதனுல் தெளிவுற்றேன். "அத்ர இதி பதம் ந ஸ்யாதிவ" என்றெழுதியிருக்கலாம் ஸ்வாமி; "ந ஸ்யாதிதி நிச்சீயதே" என்றெழுதினது அவஜ்ஞையாய்விட்டது. இங்கு அண்ணுவின் நிருபணம் அதி மநோஹரம்.

8. **விஞ:**—*விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்* என்கிற அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே *ஸங்கிதே: *அகிஞ்சித்கரத்வம்** என்றிருப்பதை அகிஞ்சித்ருபத்வமென்று திருத்தவேணுமென்று நிச்சயமாகச் சொல்லுவேனென்று கோழியாலம் ஸ்வாமி யெழுதியிருக்கிருரே; இந்த நிச்சயத்தையாவது நிலைநாட்டினீரா?

**விடை:**—எந்த நிச்சயமும் காசுக்குதவாததாயிற்றே. அதைப் பாடாந்தரமாகப் போடவுங்கூட நெஞ்சாலும் நினைக்கமுடியாதபடியன்றோ அண்ணு வரைந்திருக்கிருர்.

9. **விஞ:**—ஸஹகார்யந்தர வித்யதிகரணத்தில் ஸித்தாந்தத்தில் "ச்ரவணமநநாப்யாம் ப்ராப்தம் வேதநம் ப்ரதிலப்ய இத்யர்த்த:" என்றதில் ப்ராப்தம் என்றதை அப்ராப்தமென்று பெரியார்களின் உபதேசத்தைக்கொண்டு அண்ணு திருத்தியிருந்தாரே; பாவப்ரகாசிகையில் ப்ராப்தம் என்கிற பாடம் ஆதரிக்கப்பட்டிருப்பதைக் கொண்டு கோழியாலம் ஸ்வாமி "ப்ராப்தமென்றிருந்தாலும் அப்ராப்தமென்றிருந்தாலும் உபய பாடத்தையும் நிர்வஹிக்கக் குறையில்லை" என்றெழுதியிருந்தாரே, அங்கு என் செய்தீர்?

**விடை:**—என்ன செய்யமுடியும்? ஆசார்யாபிப்ராயரக்ஷணம் அப்ராப்தமென்று முடித்தேன். அண்ணுவின் நிருபணம் அசைக்கமுடியாமலன்றோ இருக்கிறது.

10. **விஞ:**—ஸ்வாசார்யர் காட்டின திருத்தங்களை உபேக்ஷித்ததுபோல அண்ணு காட்டின திருத்தங்களையும் உபேக்ஷித்ததுண்டோ?

**விடை:**—அது எப்படி முடியும்? *தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம* என்று அடியேன் விஜ்ஞாபிக்கவேணுமா?

முடிவான வினா:—அப்படியானால் அண்ணாவின் பரீக்ஷாக்ரந்தத்தை மறுக்க வேணுமென்று ஸதஸ்ஸுக்குச் சென்றீரே; எங்ஙனம் சென்றீர்?

விடை:—இப்போது நெஞ்சு தளும்பியிருக்கிறது; ஆலோசித்துச் சொல்லுகிறேன்.

## ஒரு முக்கியமான விஜ்ஞாபனம்

வைகுண்டவாஸியான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தம் வெளிவந்து ஏறக்குறைய முப்பது வருஷமாகிறது. அதற்கு மறுப்பான அடியேனுடைய நூல் அப்போதே விரைவில் வெளிவந்துங்கூட சில பல வித்வான்கள் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனத்தில் விச்வாஸத்தினால் தங்கள் தங்களுடைய ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களில் (அந்த ஸ்வாமியின் சோதனங்களை நம்பி) அப்படியப்படியே திருத்திக் கொண்டார்கள். பிறகு 1969-ல் பேரருளாளனான பரமபுருஷன் உத்தமூர் ஸ்வாமியைக் கொண்டு ஸ்ரீபாஷ்யமுத்ரணம் செய்வித்து அதில் கோழியாலம் ஸ்வாமி திருத்தின பாடங்களைத் தள்ளியும் என்னுடைய நிரூபணங்களை ஆதரித்துப் பழைய பாடங்களையே சேர்த்தும் பதிப்பிக்கச்செய்தான். அதன் முன்பு திருத்திக்கொண்டவர்கள் யாவரும் மறுபடியும் அந்தத் திருத்தங்களை யடித்து பழைய பாடங்களையே ஆதரித்து வருகிறார்கள். அடியேனுடைய பாடசோதந பரீக்ஷா வெளிவராமலிருந்தால் ஸ்ரீபாஷ்யகார திவ்யஸூக்திகளுக்கு உலகில் எவ்வளவு க்ஷோபம் ஏற்பட்டிருக்கு மென்பதை மத்யஸ்தர்களான மநீஷிகள் விமர்சிக்கமாட்டார்களா? இப்படியாக அடியேன் செய்த காரியத்தை வேறு யாவரேனும் செய்ய நினைத்ததுண்டோ? இது ஸம்ப்ரதாய பேதத்தைச் சேர்ந்த விஷயமன்று. ப்ராமாணிக வித்வான்கள் இந்த விஷயமொன்று கொண்டே என்னுடைய க்ரந்தங்கள் எதுவும் ப்ராமாணிகார்த்த ப்ரதிஷ்டாபனத்திற்காகவே ஏற்பட்டவை என்று திண்ணமாக எண்ணுவர்கள்.

## மற்றொரு முக்கிய விஜ்ஞாபனம்

ந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபர் தாமே (ஸம்புடம் 32, ஸஞ்சிகை 6ல்) புஸ்தக விமர்சனம் என்கிற பகுதியின் கீழே எழுதியிருந்த துர்பாஷணங்களுக்கு ப்ரத்யக்ஷர மறுப்பாக "ந்ருஸிம்ஹப்ரியா ஸமுத்போதனம்" என்னும் கட்டுரை (16 பக்கங்கொண்டது; பல தத்துவங்களை விசதமாக விளக்குவது) ஸ்ரீராமாநுஜன் 302ல் வெளிவந்தது. அதைப்பற்றி இதுகாறும் இப்பத்ராதிபர் வாயைக் கையைத் திறந்தாரோ? முடிவாக இது கேளீர். ஸ்ரீமான் உ. வே. மதுராந்தகம் வீரராகவாசாரிய ஸ்வாமி என்பவர் சென்ற ஆவணி மாதத்தில் ஸ்ரீபெரும்பூதூர் எழுந்தருளியிருந்தபோது என்னுடைய கேள்விகளுக் கெல்லாம் ஆர்ஜவத்துடன் விடையிறுத்தார். அந்த வினாவிடைகளெல்லாம் ஸ்ரீ ராமாநுஜன் 300, 301-ல் வெளிவந்துள்ளன. அந்த மதுராந்தக ஸ்வாமியின் விடைகளினால் உலகம் ப்ரஸந்நமாகியுள்ளது அந்த விடைகள் தவறானவை என்று இந்த பத்ரா

திபர் கருதினால் அந்த விடைகளைக் கண்டித்து நம்முடைய வினாக்களுக்கெல்லாம் தகுந்த விடைகளை வெளியிடட்டும். உலகத்துக்குச் செய்யவேண்டிய உதவிகளில் இது முக்கியமானதல்லவா? ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளின் உண்மைப் பொருள்களை விவரித்தும் ஸ்ரீதேசிக பக்தர்களான வித்வான்களுக்கு அவற்றை உணர்த்தியும் போருகிறோம்நாம் என்பதையே கொண்டு ந்ரு. பத்ராதிபர் எழுதியுள்ள அபசப்தங்களைக் கண்டு யாரும் நிலைகலங்கார்கள்.

கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனம் வெளிவந்த காலத்தில் ஸ்ரீகாஞ்சியில் ப்ரசண்ட பண்டிதோத்தமராயும் பலகால் ஸ்ரீபாஷ்ய ப்ரவசனம் செய்தருளினவராயும் இருந்த ஸ்ரீமதுபயவே. நாவல்பாக்கம் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி அந்த பாடசோதனத்தைக் கண்டு மிகவும் சீற்றமும் வருத்தமும் கொண்டு ஒவ்வொரு வித்வானிடத்திலும் "நாமெல்லாரும் ப்ரவசனம் செய்து வருகிற ஸ்ரீபாஷ்ய பாடங்கள் அந்த பரம்பரையாக (கண்மூடித்தனமாக) நிகழ்வனவாய்க் கோழியாலம் ஸ்வாமியின் அபிப்ராயம் போலும்!" என்று ஸாதித்து வந்தாரே யொழிய அதைக் கண்டிக்கும்படி ஒரு வித்வானையும் தூண்டவில்லை. கண்டித்தெழுத ஒரு வித்வானும் முன்வரவுமில்லை. அப்போது நாம் முன்வந்தது அஹம்பாவத்தினாலன்று. லோகோபகாரத்திற்காகவே. கோழியாலம் ஸ்வாமி திருத்தினபாடங்களை அவருடைய அந்தரங்க சிஷ்யரும் ஆதரியாமல் அடியேனுடைய விமர்சங்களுக்கே மதிப்புக்கொடுத்து ஸ்ரீபாஷ்ய முத்ரணம் செய்ததை ப்ராமாணிகர்கள் உகந்து போற்றுகிறார்கள்.

## ந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபர்க்கு நல்லுபதேசம்

ந்ருஸிம்ஹப்ரியா பத்திரிகையோடு நமக்குத் தொடர்பு நெடுநாளாக இல்லாமையால் இந்த பத்ராதிபர் யாவர், இவருடைய திருநாமம் என்ன என்பதை இப்போது விசாரிக்க ப்ராப்தமாயிற்று. விசாரித்துத் தெரிந்துகொண்டேன். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் பரமஹம்ஸ.இஞ்சிமேட்டழகிய சிங்கருடைய தௌஹித்ரர் என்று செவியுற்றேன். இவரோடு எனக்கு நெடுநாள் பழக்கமுண்டு. இவருடைய யோக்யதையின் அளவையும் அறிவேன். அளவைக்கடந்து இவர் எழுதுவது தகுதியற்றது. "ஸ்ரீ தேசிகனையும் ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்த்த மஹாவித்வான்களையும் கண்மூடித்தனமாகத் தாக்கிவருவதாக" எழுதியிருப்பது விரலுக்குத் தகாத வீக்கம். இதுதான் கண்மூடித்தனம். இவ்விரண்டு விஷயங்களுக்கும் உண்மையான விடையை உலகமறிய விளம்புகிறேன். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி (வர்த்தமான) அழகியசிங்கர் நாலைந்து வருஷங்களுக்குமுன் ஒருநாள் முக்கூரிலிருந்து சொந்த திவ்யவாஹனத்தில் புறப்பட்டு பகல் 2 மணிக்கு காஞ்சீபுரம் எழுந்தருளியாயிற்று. அடியேனுடைய க்ருஹத்தினுள்ளேயும் ஸபரிவாரராக எழுந்தருளியாயிற்று. ஸன்னிதி முன்பே வீற்றிருந்தாயிற்று. அப்போது அடியேன் பாடசாலையிலிருந்தேன். என்னுடைய பரமாப்தரான ஸ்ரீமான் தாசரதி ஐயங்கார் பாடசாலைக்கு ஓடிவந்து ஸ்ரீ அழகியசிங்கர் எழுந்தருளியிருப்பதைச் சொல்லி அடி

யேனை க்ருஹத்திற்கு அழைத்துச்செல்ல, ஸ்ரீ ஸ்வாமியை தெண்டன் ஸமர்ப்பித்து இருகரையுமழிக்கும் அந்த க்ருபா ப்ரவாஹத்தின் பெருமையைச் சிறிது நாழிகை வார்த்தையாடி அனுபவித்தானபிறகு ஸ்ரீ அழகிய சிங்கர் "ஸ்ரீ தேசிகனுடைய திவ்யமங்கள விக்ரஹம் இங்கு திருவாராதனத்தில் இருப்பதாகக் கேட்டிருக்கிறேன். ஸேவிக்கலாகுமோ?' என்று ஸாதிக்க, கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்க அஸமயமாய் இருந்தாலும் ஸ்ரீஸ்வாமி நியமனத்தையே தர்மசாஸ்த்ரமாகக் கொண்டு திருக்காப்பு நீக்கி ஸ்ரீ தேசிக திவ்ய மங்கள விக்ரஹத்தை ஸ்ரீ அழகிய சிங்கர் ஸேவிக்கும்படிச் செய்தேன். ஸேவித்து உகந்தருளியாயிற்று. விதுரர் திருமாளிகைக்குக் கண்ணன் எழுந்தருளியது போல ஸ்ரீ அழகியசிங்கர் அடியேனுடைய குடிலுக்குத் தாமே எழுந்தருளியபோது காஞ்சீபுரம் முழுவதும் அடியேனுடைய குடிலைச் சூழ்ந்துவிட்டது. இவ்விஷயத்தை அறியாதாரில்லை. இற்றைக்கும் ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியில்கேட்டு உணரலாம். தேசிகனுடைய திவ்ய க்ரந்தங்களை வ்யாக்யானிப்பதும், அச்சிடுவதுமே பொழுதுபோக்காயிருக்கும் அடியேன் தேசிகனைத் தாக்கும் பாதகத்தில் சிறிதும் ஸம்பந்தம் உடையேன் அல்லேன். 'கண்மூடித்தனமாக' என்பது ந்ரு. பத்ராதிபருக்கே தகும். அடுத்த விஷயமும் கேண்மின். ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்த்த மஹாவித்வான்கள் யாவரும் அடியேனுக்கு உயிர்போன்றவர்கள். ஸ்ரீமத் உபயவே. மதுராந்தகம் வீரராகவாசாரிய ஸ்வாமியையும் (அபிநவ தேசிக) உத்தமூர் வீரராகவாசாரிய ஸ்வாமி மற்றும் மதுராந்தகம், திருப்பதி முதலான திவ்யஸ்தலங்களிலுள்ள வித்வான்களையும் அந்தரங்க ப்ரீதியுடன் போற்றிவருகிறேன். ஏதோ விஷய சர்ச்சை என்பது தனிப்பட்ட விஷயம். அபசாரோக்தி லவலேசமும் புகாதபடி ஆத்மாவைக் காத்து வருகிறேன். சில அறிவிலிகள் ப்ரதீபசலபந்யாயேந மாய்ந்து மடிந்துபோவது அவரவர்களுடைய தௌர்பாக்ய மத்தனை. கிம் பஹுனா? தென்னிந்தியாவிலுள்ள தென்கலை வித்வான்களையும், வடகலை வித்வான்களையும் கணக்கெடுத்தால் அடியேனுக்கு ப்ரியதமர்களாயும், மாநநீயர்களாகவுமுள்ள வித்வான்கள் வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களாகவே தேறுவர்கள். ப்ரஸங்காத் இதையும் விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீமத் உத்தமூர் ஸ்வாமியின் அருமையான பல பதிப்புக்களை ஆராய்ச்சிசெய்ய ப்ராப்தமானபோது விமர்ச ஸரணியில் பலவும் எழுதலாயிற்று. அந்த ஸ்வாமி அவற்றைக் கடாக்ஷித்தருளியே யிருப்பர். ஆனாலும் ஆத்மகுண பரிபூர்ணராயும், ப்ராமாணிக சிகாமணியாயுமுள்ள அந்த மஹா ஸ்வாமி வரம்பு மீறி எதையும் எழுதாமல் தம்முடைய வைதுஷ்ய வைபவத்தை விளக்கி வருவதானது ந்ரு. பத்ராதிபர் போன்றவர்களால் அனுகரிக்க ஆசைப்படவும் முடியாதது. இது நெஞ்சு கனிந்து எழுதும் வார்த்தை.

இரண்டு மூன்று வருடங்களுக்குள்ளாக ஸ்ரீமத் உத்தமூர் ஸ்வாமி அருமையாகப் பதிப்பித்த (ஸவ்யாக்யான) பாதுகா ஸஹஸ்ர, யாதவாப்யுதய, ஸங்கல்ப ஸூர்யோதய, ஸுபாஷித நீவிகளை அடியேன் ஸ்ரீராமாநுஜனில் விமர்சிக்கும்போது அவற்றிலுள்ள குற்றங்குறைகளை எடுத்துக்காட்டியிருப்பது ப்ரஸித்தம். அதற்காக உத்தமூர் ஸ்வாமி திருவுள்ளம் கன்றினதும் இல்லை, அபசப்தங்களைக் கொட்டினதுமில்லை. அந்த ஸ்வாமியிடமிருந்து ப்ராமணிகத்வத்தைப் பயிலவேண்டுமிவர்கள்.

**விவாத விஷயங்கள் ஸ்ரீராமாநுஜனில் இனி இடம்பெறமாட்டா.**

குறைகள் கூறவேண்டிய அவசியம் தோன்றினல் உலகுக்கு உதவி செய்தே தீரு வேன்''—என்றேன். இந்த வார்த்தைகள் நடந்து நான்கு நாளாயிற்று. நேற்றைத் தபாலில் பாதுகா பத்ரிகை (சென்ற மாதத்தில் வெளிவந்தது) ஒரு ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியினுல் அனுப்பப்பட்டுக் கிடைத்தது. அத்துடன் ஒரு கடிதமும் கிடைத்தது; ''வரலாற்றில் பிறந்த வைணவம்'' என்னுஞ் சுவடியைப்பற்றி ஸ்ரீமதாண்டவனுடைய திருவுள்ளம் இப்பத்ரிகையில் வெளிவந்துள்ளது. கடாக்ஷிக்கவேணும்'' என்றெழுதியிருந்தது. பத்ரிகையைப் பிரித்துப் பார்க்கத் தொடங்கினேன். பத்ரிகையின் முகப்பில் ''ஸ்ரீமத் ஆண்டவன் அனுக்ரஹம்'' என்ற மகுடத்தின்கீழ் நான்கு அநுஷ்டுப் ச்லோகங்கள் வெகுநாளாகவே அச்சிடப்பட்டு வருகின்றன. முதன்முதலாக அவற்றை நாம் பார்த்தபோது ''ஸ்ரீரங்கேச ப்ரியா'' என்கிற மூன்ருவது சுலோகத்தில் ''பக்தி சித்தாநந்த ப்ரதாயிநீ'' என்றிருந்ததைக் கண்டோம்; அப்போதே பத்ராதிபர்க்கு எழுதினோம்—''பக்திசித்த.....என்றிருப்பது அநந்விதம்; 'பக்த சித்த......' என்று ஸ்ரீமதாண்டவன் அநுக்ரஹித்தருளி யிருக்கலாம்; அச்சுத் தவருக (பக்தி சித்த) என்று விழுந்திருக்கக்கூடும்; திருத்தினல் நலம். 'பக்தியையும் சித்தானந்தத்தையும்' என்று த்வந்த்வஸமாஸம் விவக்ஷிதமென்று ஏதாவது பதிலெழுதிக்கொண்டிருக்கவேண்டாம்; 'மே பகவத்பக்திஜநநீ' என்றிருப்பதால் அது போதும்.........'' என்று தெரிவித்தோம். உடனே திருத்தி வெளியிட்டார்களப்போது. இப்போது பார்த்ததில் ''பக்தி சித்தானந்த'' என்று பழைய அபத்தமே காண்கிறது. 'இவன் தெரிவித்தா நாம் திருத்திக்கொள்வது!' என்று யாரேனும் கூறியிருக்கலாம். 'வாதத்திற்கு மருந்துண்டு; பிடிவாதத்திற்கு மருந்தில்லை' என்று வசனமுண்டே.

திருவயிந்திரபுரம் சேட்லூர் ஸ்வாமி ''நரஸிஹ்மாசாரியர்'' என்றெழுதி அச்சிட்டுக்கொண்டிருந்தார். நமக்கு அவரோடு ஸௌஹார்தமிருந்த காலத்தில் 'நரஸிஹ்ம' என்பது தவறு; (நரஸிம்ஹ) என்றெழுதவேணும்' என்று தெரிவித்திருந்தோம். யுக்தமென்று ஸ்வீகரித்து அவ்வாருகவே திருத்திக்கொண்டார். பிறகு ப்ரதிப்ரதிவாதி பாவத்தினுல் மாச்சரியம்விளைய, மீண்டும் பழையபடியே (நரஸிஹ்மாசாரியர்) என்றெழுதத்தொடங்கி ஆயுளுள்ளவரை அப்படியே எழுதித்தீர்த்தார். அவர் ப்ரும்மம்—ப்ரும்மம் என்றெழுதிக்கொண்டிருந்த விஷயத்திலு மிப்படியே.

இப்போது கையில்கிடைத்திருக்கும் சித்திரைமாதப் பாதுகையில் நமது கண்ணில்படும் பிழைகள் அபரிமிதம்; சிலவேயெடுத்துக்காட்டுவோம். (இதில் பக்கம் 6ல்) வாழ்த்துப் பாமாலை யொன்று வெளிவந்துள்ளது, அதில் ''காப்பு—நேரிசை வெண்பா'' என்கிற முதற்செய்யுளில் 'செந்திருவைச் சீர்குடந்தைச் செல்வியைச் சேவித்து உந்தியடைந்துய்யும் உலகு' என்னும் மூன்று நான்காமடிகளைத் தமிழர்கள் குறிக்கொள்ளவேணும். வெண்பாவுக்கு வெண்டளை உயிரானது. ''காய் முன் நேரும் மாமுன் நிரையும் விளமுன் நேரும் வருவது வெண்டளை'', மேலே குறித்த வெண்பாவின் மூன்ருமடியின் முடிவு ''சேவித்து'' என்றுள்ளது. அடுத்த அடி ''உந்தி'' என்று நேரசையில் தொடங்கியுள்ளது. இங்கு மூன்ருமடியின் முடிவுசீர் மாச்சீரேயாகும். 'சேவித்து' என்று இவரெழுதிவிட்டாலும் இறுதியிலுள்ள துகரம்

நான்காமடியின் முதலெழுத்தேயாகும். (சேவித்) என்பது மாச்சீராகுமேயொழிய கவி நினைக்கிறபடி காய்ச்சீராகாது. இதற்கு அபவாத முண்டென்பரேல் அது மருளேயாகும். அன்றியும் மேற்செய்யுள்கள் பதினுறிலும் "அடைமனமே அடைமனமே" என்றே இட்டிருப்பது தொடையழகுக்குப் பொருந்தாது. கருவிளங் காய்ச்சீர் பயில இயலாத விடம் அது என்றுணரவேண்டும்.

மேலும், பத்தாவது பக்கம் தொடங்கி வெளிவந்துள்ள திவ்யதேசானுபவம் என்கிற கட்டுரையில் திருமாலிருஞ்சோலைமலையை மதுரையரசனுகிய பாண்டியன் கொண்டாடினுன் என்பதற்கு ஆழ்வார் பாசுரங்கள் காட்டுமவர் "குறுகாத மன்னரைக் கூடுகலக்கி வெங்கானிடைச் சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வன்" என்கிற பெரியாழ்வார் பாசுரத்தை எடுத்து இது பாண்டியனுக்கிட்ட பாசுரமென்று கருதி ஏதோ எழுதியுள்ளார். அங்கு எம்பெருமான் விவக்ஷிதனேயொழிய அரசன் விவக்ஷிதனல்லன். "அலம்பாவெருட்டா" என்னும் அப்பதிகத்தில் பாசுரந்தோறும் இரண்டாமடியின் முடிவில் (மலே) என்று வந்துள்ளது. மலைக்கு ஸ்வாமியான எம்பெருமானே அங்கு ப்ரஸ்தாவிக்கப் படுகிறுன். ப்ரக்ருத பாசுரத்தில் .....:"போக்குவிக்கும் செல்வனுன எம்பெருமான் எழுந்தருளியுள்ள மலே" என்பது பொருள்; வேறு வகையான பொருள் சிறிதும் சேராது. இங்கு மிக வருந்தத்தக்கமருள்.

அதிலேயே பக்கம் 22-ல் அமலனுதிபிரான் நான்காம் பாசுரக் கட்டுரையொன்றுள்ளது. அப்பாசுரத்தில் (வரி 4) 'அம்மான்' என்கிற மூலத்திற்கு "ஸ்வாமியுடன் பெருமானின்" என்று பொருள் வரையப்பட்டுள்ளது. இதற்கு என்ன அர்த்தம் என்று அவரே கூறவேண்டும் (சதுர) என்ற மூலத்திற்கு அர்த்தமெழுதும்போது "சதுர என்ற வட்மொழி சதிர் எனத் தமிழில் திரிந்துவந்தது" என்றெழுதியுள்ளார். பாசுரத்திலும் அந்த வடசொல்லே யுள்ளதேயன்றி சதிர் என்றில்லை: *சதிரிளமடவாரை நினைத்துக்கொண்டு எழுதினுர் போலும்! 'ப்ரும்மம்' 'ப்ரும்மம்' என்கிற ப்ரமம் இவரையும் விடவில்லை. இத்தகைய சிந்தனைகள் எமக்கு நேற்றிரவு நெடுங்காலம் நிகழ்ந்தன. அச்சுத்தாளுக்குப் பஞ்சமான இக்காலத்தில் இவ்வளவே போதுமென்று நிறுத்திக் கொள்கிறேன். இவையெல்லாங் கிடக்கட்டும். ஸ்ரீமதாண்டவன் அநுக்ரஹமான முதல் ச்லோகத்தில் "பக்திசித்த" என்பதை "பக்தசித்த" என்று திருத்தினுல் பத்ராதிபருடைய ப்ராமாணிகத்வம் பொலியும். ஸ்ரீமதாண்டவன் ஸாக்ஷாத்தாகக் கடாக்ஷித்தருளினுல் இத்தகைய அவத்யங்களுக்கு இடமிராதென்று ஸ்ரீஸ்வாமிஸன்னிதியில் பலகால் விஜ்ஞாபித்திருப்பதை ஸ்மாரயே. அச்சாவதற்கு முன்பு ஸ்வாமி திருக்கண் சாத்தியருளினுல் ஒரு அவத்யமும் புகாதென்பது எமது திடநம்பிக்கை. இத்தகைய பிழைகளை அடியேன் தவிர வேறுயாரும் தெரிவிக்கத்துணிய மாட்டார்களாதலால் அடியேனுக்குப் பத்ரிகை அனுப்பாமல் நிறுத்திவைப்பது நன்றே. அடியேனுக்கும் ச்ரமம் குறையும். இப்போது டில்லிமாநகரில் Supreme Court Judge ஆக விளங்கும் உயர்திரு. A. அழகிரிசாமியவர்கள் பல விடங்களிற் பேசியுள்ளார்—"தவருக யார் எழுதினுலும் P. B. A. ஸ்வாமி அதைக் கண்டிக்கத் தயங்கவேமாட்டார்" என்று. அதையே நினைப்பூட்டி நிற்கிறேன்.

# அருளிச்செயல் ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

## 125. தோள் கண்டார் தோளே கண்டார்

இது கம்பராமாயணம் உலாவியற்படலத்திலுள்ள செய்யுள் ஆகும். செய்யுள் வருமாறு.

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவுகண்டாரை யொத்தார்."

ஆராவன்பிளையவனோடும் விச்வாமித்ர முனிவன்றன் வேள்வி காத்துப் பின் மிதிலை நகர்புக்க இராமபிரான் அம் மாநகர் வீதிகளில் உலாவியபோது அவனது தோளழகைக் கண்ட மாதர்கள் மற்றோர் அவயவத்தைக் காணவிலாமல் தோளழகை மட்டுமே கண்டுகொண்டிருந்தார்கள். வீரக்கழலணிந்த திருவடித் தாமரைகளைக் கண்ட மாதர்கள் திருவடியழகொன்றையே கண்டுகொண்டிருந்தனர். பெரிய திருக்கைகளைக் கண்டவர்களும் மற்றொன்றினைக் காணாதவராயினர். எவவே வாளொண்கண்ணியருள் இராமனது வடிவழகு முழுதினையும் கண்டவர் ஒருவருமிலர். அங்ஙனம் இராமனது வடிவை முழுவதும் பாராமல் ஏகதேசமே பார்த்தவர்கள் எம்பெருமான் பெரிய விச்வரூபத்தைக் கொண்டு நின்றவக்காலத்தில் அவ்வுருவத்தின் ஒவ்வொரு பகுதியையே கண்டவர்களை யொத்தார்கள் என்பது இதன் பொருள்.

ஸ்ரீரங்கநாதனுடைய திருமேனியழகிலீடுபட்ட ஸ்ரீ பராசரபட்டர் "ஏகைகஸ்மிந் பரமவ்யவே அநந்த ஸௌந்தர்ய மக்நம் ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதாமா மதா மந்தசக்ஷு:" என்கிற ச்லோகத்தினால் தமது திருக்கண்ணை விளித்து, "வாராய் கண்ணே! அரங்கனுடைய ஒவ்வோரவயவமும் எல்லைகாண முடியாத அழகுடையதாதலால் ஒவ்வோரவயவத்திலும் ஆழ மூழ்கிக் கிடக்க வேண்டிய நாம் எல்லா அவயவங்களையும் எப்படி யநுபவிக்கப் போகிறோம் என்று கவலை கொள்ளாதே" என்று கூறி ஸகலாவயவங்களையும் முற்றூட்டாக அநுபவிக்கப்பெறும் உபாயமொன்று தெரிவித்தருளினர். அவ் வுபாயம் மிதிலாபுரியிலுள்ள மாதர்க்குத் தெரியாததலால் இராமனது ஓரவயவத்தைக் கண்டவர்கள் மற்றோரவயவத்தைக் காணமாட்டாது வருந்தினரெனப்பட்டது.

## 126. தௌவையாய்ப் புகழாய்ப் பழியாய்

திருவாய்மொழி ஆறும்பத்து மூன்றும் பதிகத்தில் ஆறும்பாட்டில் "பூவில் வாழ்மகளாய்த் தௌவையாய்ப்புகழாய்ப் பழியாய்" என்பது ஓர் அடி. இங்கு "பூவில் வாழ்மகள்" என்று ஸ்ரீ மஹாலக்ஷ்மியைச் சொல்லி, தௌவை என்று அவளுக்கு எதிர்த்தட்டான மூதேவியைச் சொல்லுகிறது. "உடனே புகழாய்ப் பழி

யாய்'' என்று கீர்த்தியையும் அபகீர்த்தியையும் சொல்லுகிறது. இப்படியாக இப்பதிகம் முழுவதும் ஒன்றோடொன்று சேராதவற்றைச் சேர்த்துச் சொல்லுகிறது. பதிகத்தின் தொடக்கமே ''நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்'' என்றுள்ளது. நல்குரவு என்பது தாரித்ர்யம். செல்வு என்பது ஸம்பத்து. நரகு என்பது துக்கானுபவம்; சுவர்க்கம் என்பது ஸுகாநுபவம். இப்படியே பதிகம் முழுவதும் முரண் தொடையாகவே அமைக்கப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட விருத்த விபூதி ஸமுச்சயம் எதற்காகவென்னில்; ஆரும்பத்தின் முதற்பதிகமான *வைகல் பூங்கழி வாயில் தூது விட்டார் ஆழ்வார். சிறந்த செல்வம் மல்கு திருவண் வண்டூரிலே தூதுவிட்டபடியாலே சிறந்த செல்வத்திலே கால் தாழ்ந்திருந்த எம்பெருமான் சிறிது தாமதித்து வந்தான். ஆழ்வார் அத்தாமதம் பொறுதாராய் ப்ரணய ரோஷம் தலையெடுத்துப் பேசத் தொடங்கினார். அது அடுத்த *மின்னிடை மடவார் பதிகம். அதில் ஊடல்ரஸம் மிகமிகத் தலையெடுத்துள்ளது. ''என்னைமார் தன்ம பாவமென்னுர் ஒரு நான்று தடிபிணக்கே'' என்றுகூடப் பேசும்படியாயிற்று. ஊடலுக்கு அடுத்தபடி கூடல் நேர்ந்தே தீருமாதலால் அந்தக் கூடல் நேர்ந்தபடியும் *மின்னிடை மடவார் பதிகத்திலேயே ''நின்றிலங்கு முடியினாய்'' என்கிற பாசுரத்தால் ஸூசிப்பிக்கப்பட்டதாயிற்று. ''எவ்விதத்திலும் இவனோடு கூடலாகாது என்று மிக்க உறுதியுடனிருந்த நம்மைக் கூடும்படியாக்கிக் கொண்ட இவனுடைய வலிமை என்னே!'' என்று விஸ்மயப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னுடைய அகடிதகடநா ஸாமர்த்யத்தை நன்கு காட்டிக் கொடுத்து அத்தன்மையனான தான் திருவிண்ணகரிலே நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறபடியையும் காட்டிக் கொடுக்க, ஆழ்வார் அது தன்னைப்பேசி இனியராகிறார் 'நல்குரவும் செல்வும் என்கிற பதிகத்தில்.

## 127. நமனும் முற்கலனும் பேச

திருமாலையில் பன்னிரண்டாம் பாசுரத்தின் முற்பகுதி ''நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி' என்பது.

ஸ்ரீ விஷ்ணுதர்மத்தில் கூறப்பட்டுள்ள முத்கலோபாக்யானம் என்னும் கதை (திருநாம வைபவ ப்ரகாசகமானது) இதில் அநுபவிக்கப்படுகிறது. அதுவருமாறு;

முத்கலனென்பவன் பெரும்பாவிகளில் தலைவன்; அவன் ஒருநாள் கோதானம் பண்ணும்போது 'க்ருஷ்ணாய' என்று சொல்லி தானஞ்செய்தான். பின்பு அவன் மாண்டபிறகு யமகிங்கரர்வந்து நெருக்கி அவனை யமன்பக்கலிலே கொண்டுசெல்ல, யமன் இவனை எதிர்கொண்டு ஸம்பாவனை செய்தான். அதுகண்ட முத்கலன், ''உன்னுடைய படர்கள் என்னை நெருக்கிக் கொண்டுவாராநிற்க, நீ என்னை கௌரவிப்பதற்கு என்னகாரணம்?'' என்று கேட்க; ''உன்னுடைய மேன்மையை அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை,--க்ருஷ்ணநாமத்தை நீ ஒருகால் சொன்னாய் காண்!'' என்று யமன் அதனைப் புகழ்ந்துகூற, இப்படி ப்ரஸக்தாநுப்ரஸக்தமான இந்த ஸம்வாதம் நரகாநுபவம் பண்ணுகிறவர்களுடைய காதிலே விழுந்தவாறே அந்த

நரகந் தானே துக்காநுபவ நிலமாயிருந்த நிலைமாறி ஆநந்தாநுபவ நிலமாய்விட்ட தென்றால் இத்திருநாமத்தின் வைபவம் எப்படிப்பட்டதாயிருக்கவேணும்? "என்னை நீ ஸத்கரிப்பதற்குக் காரணமென்ன?" என்று முத்கலன் கேட்க "முன்பு நீ க்ருஷ்ண நாமத்தைச் சொன்னாய்" என்று யமன் உத்தரமுரைத்த இவ்வளவேயாய்த்துப் பிறந்தது; யமன் தனக்குப் பாவநமாக அத்திருநாமத்தை உச்சரித்தவனல்லன்; முத்கலன் ப்ரார்த்திக்க அவனுக்கு உபதேசித்தவனுமல்லன்; நரகாநுபவம் செய்கிறவர்களின் காதிலே இதுவிழுந்து அவர்கள் உய்வுபெறவேணுமென்று நினைத்துச் சொன்னவனுமல்லன்; இனி இதனைக் கேட்டவர்களோ பாபம் பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து மீண்டும் ப்ராயச் சித்தம் செய்து கொள்ளக்கூடிய காலத்திலே கேட்டவர்களல்லர்; பாபத்தினுடைய பலன்களை அநுபவிக்கும்போதாயிற்றுக் கேட்டது. அப்போதுதானும் இச்சையோடு கேட்டாருமல்லர்; யாத்ருச்சிகமாகத் திருநாமம் செவிப்பட்டவித்தனையே. இப்படிப்பட்ட திருநாமமே இவ்வளவு பெருமையுடைத்தானால், பின்னை என் சொல்லவேண்டும்?

## 128. நாவகாரியம் சொல்லிலாதவர்..வாழ்திருக்கோட்டியூர்

பெரியாழ்வார் திருமொழியில் நான்காம்பத்தில் நான்காம் பதிகம் "நாவகாரியம் சொல்லிலாதவர்" என்று தொடங்குவது. இந்த முதற்பாட்டின் முன்னிரண்டடிகளையும் அடுத்த இரண்டாம் பாட்டின் முன்னிரண்டடிகளையும் ஆழ்ந்து நோக்கினால் நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் ஸுப்ரஸித்தமான ஓர் ஐதிஹ்யம் உள்ளுறையும் படியைக் காணலாம். அதைச் சிறிது விவரிக்கிறோம்.

எம்பெருமானார் பஞ்சாசார்ய பதாச்ரிதர் என்று ப்ரஸித்தர். அதாவது ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஐவரை யடிபணிந்து வாழ்ந்தவர் என்கை. "நேரே ஆசார்யனென்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை உபதேசித்தவனை" என்கிற ஸ்ரீவசனபூஷண சூர்ணையின்படி ஸ்வாமிக்கு ஸாக்ஷாத் ஆசார்யர் பெரியநம்பியாவர். அவர் ரஹஸ்யார்த்தங்களைச் சிறிது உபதேசித்துவிட்டு ஸாதித்தருள்வது "ஆளவந்தார் திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்த விசேஷங்களைச் சேமவைப்பாக வைத்தருளியிருக்கிறார். அவரிடம் சென்று தெளியக் கேட்பது" என்று. அப்படியே உரிய ஸமயம் பார்த்துத் திருக்கோட்டியூர்க்குச் செல்ல நினைத்த எம்பெருமானார் ஒன்றிரண்டு பர்யாயமன்றிக்கே பதினெட்டு பர்யாயம் நடந்தார் என்றும் வெகுசிரமப்பட்டு ரஹஸ்யார்த்தம் பெற்றார் என்றும் ப்ரஸித்தமான விஷயம். பட்டர் அருளிச்செய்த கோஷ்டீநாத ஸ்தவத்தில் "கோஷ்டீபூர்ண குருபஸத்தி குசலோ யாம் ஸச்வதாசேதிவாந்" இத்யாதி அருளிச் செய்திருப்பதும் ப்ரஸித்தம். அர்த்த கௌரவத்தையும் அதிகாரிகளின் அருமையையும் நோக்கி இதைக் கண்டபடி உபயோகித்து விடக்கூடாது என்றிருந்த ஆளவந்தாருடைய நெறியைப் பின்சென்று அவஸிலையாக உபதேசித்துவிடாமல் மிகமிக ச்ரமப்படுத்தி உபதேசித்த திருக்கோட்டியூர் நம்பியைத் திருவுள்ளத்திற் கொண்டே பெரியாழ்வார் "நாவகாரியம் சொல்லிலாதவர் வாழ் திருக்கோட்டியூர்" என்றார். நாவகாரியமாவது நாவுக்கு அகாரியமானது. சீரிய

பொருளை அவலீலையாகச் சொல்லிவிடுவது நாவுக்கு அகாரியமாகும். அத்தகைய அகாரியமில்லாதவர் திருக்கோட்டியூர் நம்பியாவர். அடுத்த பாசுரம் "குற்றமின்றிக் குணம் பெருக்கிக் குருக்களுக்கநுகூலராய், செற்றமொன்றுமிலாத வண்கையினர்கள் வாழ் திருக்கோட்டியூர்" என்பதாம். திருக்கோட்டியூர் நம்பி பக்கல் உபதேசம் பெற்ற எம்பெருமானாரை உளப்படுத்தியதாம் இச் சொல்தொடர். எம்பெருமானார் நம்பியின் நியமனத்தைக்கடந்து அவ்விடத்திலேயே ஸன்னிதி மேல்தளத்தில் சில ஆஸ்திகர்களை உட்காரவைத்துத் தாம் அருமையாகப் பெற்றவற்றை உபதேசித்தவராகையாலே அவர் குற்றவாளராக நினைக்கத் தக்கவராயினர். உண்மையில் தன்னலம் கருதாமல் பிறர் நலத்தையே கருதி உபதேசித்தவராதலால் அதைக் காட்டும் "குற்றமின்றி" என்பது. இதனையறிந்த திருக்கோட்டியூர் நம்பி ஸ்வாமியை அருகே வரவழைத்து விசாரிக்கையில் ஸ்வாமியின் விசாலமான திருவுள்ளத்தை உணர்ந்து அவர்க்கு 'எம்பெருமானார்' என்று திருநாமம் சாத்தியருளினர் என்பது ப்ரஸித்தம். அதனைத் தெரிவிக்கின்றது "குணம் பெருக்கிக் குருக்களுக்கனுகூலராய்ச் செற்ற மொன்றுமிலாத வண்கையினர்கள் வாழ்" என்னுமளவும். அருளிச் செயல்களில் ஆங்காங்கு "அங்கமாறைந்து வேள்வி நால்வேதமருங்கலை பயின்று எரி மூன்றும் செங்கையால் வளர்க்கும் துளக்கமில் மனத்தோர்" என்றும் 'தக்ககீர்த்தி அருமறையின் திரள் நான்கும் வேள்வியைந்தும் அங்கங்களவையாறு மிசைகளேழும்" என்றும் "நல்ல வந்தணர் மூன்று நால்வேதம் ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர்" என்றும் திவ்யதேச வாஸிகளான பரமைகாந்திகளைப் புகழ்ந்து கூறுவதுண்டு. இங்குத் திருக்கோட்டியூர்ப் பதிகத்தில் அங்ஙனன்றிக்கே மேலே விவரித்த இரண்டு பாசுரங்களும் மிக விலக்ஷணமாக அவதரித்திருப்பதை நோக்குமிடத்து பவிஷ்யத்தான விஷயத்தையும் ஆழ்வார் கண்டு பேசினர் என்பது ஸ்பஷ்டமாகும். 

## 129. நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே

திருச்சந்த விருத்தத்தில் நூற்றோராம் பாசுரமான "இரந்துரைப்பதுண்டு வாழி" என்கிற பாசுரத்தை எல்லாவிடங்களிலும் இரட்டித்து ஸேவித்துவரக் காண்கிறோம். ஏதாவது ஒரு திவ்யதேசத்தின் திருநாமமிருந்தால் இரட்டிப்பதுண்டு. இதில் ஒரு திவ்யதேச நிர்தேசமுமில்லை. என்ன விசேஷத்திற்காக இரட்டிப்பதென்று பார்த்தால் திருமழிசைப் பிரான் எம்பெருமானை விளித்து "வரந்தரும் திருக் குறிப்பில் வைத்ததாகில்"—தேவரீர் எனக்கு ஏதேனும் வரமளிப்பதாகத் திருவுள்ளம் பற்றினால்; "பரந்த சிந்தை யொன்றி நின்று நின்ன பாத பங்கயம் நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டும்"—நின்றவா நில்லா நெஞ்சு நில்லநின்று நின்னையே நிரந்தரம் நினைக்குமாறு வரந்தந்தருள வேணும் என்று ப்ரார்த்தித்தவிது மிகச் சிறந்த ஸம்ப்ரதாயார்த்தம். கூரத்தாழ்வான் இப்பாசுரத்தையே உட்கொண்டு வரதராஜஸ்தவத்தில் "வரத தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்" என்றருளிச்செய்தார். பகவத் ப்ராவண்யம் தோற்ற நாம் செய்கிற மனோவாக்காயங்களாலாகும் காரியங்கள் அவனருளடியாகவே வருமவையென்கிற நுண்பொருள் சிந்திக்கத்தக்கது. 

# நிகமாந்தகுருஸூக்தி ரஸாஸ்வாதங்கள்

(யாதவாப்யுதயாதிகளிலிருந்து)

***சிறு குறிப்பு:—*** நாம் சென்னைத் தொண்டமண்டலப் பள்ளி நிலயத்தில் (ஸ்ரீராமாயண பட்டாபிஷேகம் ஆன பிறகு) 1937வது வருடம் தொடங்கி ஏழு வருடம் ஸ்ரீபாகவத தசமஸ்கந்தத்தை சனிஞாயிறுதோறு மநுபவித்தோம். ஆயிரவர் அகங்குளிர, கண்ணன் திருவாய்ப்பாடியில் எழுந்தருளியிருக்கையில் நடந்த சரிதைகள் மட்டுமே அவ்வேழு வருடங்களில் அநுபவிக்கப்பட்டன. அவ்வநுபவத்தில் பூர்த்தியாகக் கலந்து கொண்டவர்களில், கீர்த்திமூர்த்திகளான ஸர். S. வரதாசார்யர், மஹர்ஷி வாஸுதேவாசார்யர், (M. D. Brothers) M. ஸுதர்சனமையங்கார் ஆகியோர் பரிகணிதர்களாவார்கள். அப்போது நிகழ்ந்த ஸ்ரீ பாகவதாநுபவத்தில் யாதவாப்யுதயாநுபவமே தலை சிறந்து விளங்கிற்று.

ஸ்ரீராமாயணமியற்றிய வான்மீகி முனிவர் தம்முடைய திறமையை அயோத்யா காண்டத்தில் அற்புதமாகக் காட்டினரென்பர் பெரியோர். அதேபோல் ஸ்வாமி தேசிகன் தம்முடைய திறமையை இம்மஹா காவ்யத்தில் நான்காவது ஸர்க்கத்தில் நன்கு காட்டி யருளினர் என்பது அடியேனறிந்த தத்துவம். அப்பேசதைய ஸ்ரீபாகவதாநுபவத்தில் இந்த நான்காவது ஸர்க்கம் ஒரு சுலோகம் விடாமல் பூர்த்தியாக அநுபவிக்கப்பட்டது. பட்டர் தமது ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் பூர்வ சதகத்தை நூற்றிருபத்தேழு சுலோகங்களினுல் அமைத்ததுபோல, ஸ்வாமி தேசிகனும் இந்த நான்காவது ஸர்க்கத்தை 127 சுலோகங்களினுல் அமைத்துள்ளனர். ஒவ்வொரு சுலோகமும் இன்சுவையே வடிவெடுத்தது, வ்யாக்யாதாவான அப்பய தீக்ஷிதருடைய அரஸிகத் தன்மையை ஆங்காங்கு எடுத்துக்காட்டி இன்சுவைப் பொருளை அடியேன் விவரிக்கும்போது மேலே ப்ரஸ்தாவித்த மஹான்கள் கண்ணும் கண்ணீருமாயிருந்த விருப்பை இற்றைக்கும் எற்றைக்கும் மறவேன். "யாதவாப்யுதயத்திற்கு தேவரீர் ஒரு வியாக்கியான மெழுதலாகாதோ?" என்றுகூட்ப் பலகால் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அப்போது அம்ருதலஹரீ பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தேனுதலால் அதில் பலபல சுவைப்பொருள்களை வெளியிட்டிருக்கிறேன். பிறகு ஸ்ரீ ராமாநுஜனிலும்.

சில வருடங்களுக்கு முன்பு யாதவாப்யுதயம் தீக்ஷிதவியாக்கியானத்தோடும் உத்தமூர் வீரராகவாசார்யருடைய டிப்பணத்தோடும் அச்சிடப்பட்டதென்று கேட்டு, அதில் நம்முடைய மனக்குறைகள் சிறிதாவது தீர்க்கப்பட்டிருக்குமோவென்று பார்த்ததில் துக்கமே அதிகரித்தது. தேசிக திவ்ய ஸூக்திகளின் ரஸம் இப்படி விரஸமாயிற்றேயென்கிற வருத்தத்தினுல் சில சுலோகங்களைமட்டும் இங்கெடுத்து வைரஸ்யத்தை விளக்கி விலக்கி ஸாரஸ்யத்தை யறிவிக்கிறோம் ரஸிகர்களுக்கு. (இந்த அறிவிப்பு, ரஸிகர்கள் ரஸகனமான பொருள்களின் அநுபவத்தை இழக்கலாகாதென்கிற கருத்தினுல் மட்டுமே.)

## 130. யாதவாப்யுதயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் ஆறுவது சுலோகம்.

*நந்தச் ச நீவ்ரேண பயேந ஸத்யஸ் ஸமேத்ய பச்யந் அநகம் குமாரம்,
தேனைவ தஸ்ய த்ரிஜகந்நியந்து: ப்ராயுங்க்த ரக்ஷாம் பரமார்த்தவேதீ* என்பது.

பூதனைவந்து முலை கொடுத்து மாண்டவுடனே நந்தகோபர் காப்பிட்ட படியைச் சொல்லுமிந்த சுலோகத்தில் நந்தகோபர்க்கு 'பரமார்த்தவேதீ' யென்கிற விசேஷணம் இடப்பட்டுள்ளது. இங்கு தீக்ஷிதர் வியாக்யானம் செய்திருப்பதாவது "பகவாநேவ ஸர்வஸ்ய ரக்ஷக இதி பரமம் அர்த்தம் அவகச்சந் நந்த:" என்பதாக. 'எம்பெருமானே ஸர்வரக்ஷகனென்கிற உண்மையை யுணர்ந்தவரான நந்தகோபர்' என்பது இதன் பொருள். இது ப்ரக்ருதத்திற்குச் சேர்ந்ததன்றாகையாலே விரஸமான பொருளென்னவேண்டும். இங்குச் சுவைமிக்க பொருள் கேளீர். (பரமார்த்த வேதீ) எம்பெருமான்தானே ஸர்வரக்ஷகனுயிருக்கச் செய்தேயும் தனக்குப் பிறர் செய்யும் ரக்ஷையினால்தான் ரக்ஷணமுண்டாகுமென்று நினைப்பவனென்கிற பரமார்த்தத்தை யுணர்ந்தவர் நந்தகோபர் என்றபடி. அவனுக்குப் பிறர் செய்யும் ரக்ஷையாவது காப்பிடுதல், பல்லாண்டு பாடுதல், போற்றியென்னுதல் முதலியனவாம். விபவாவதாரங்களிலும் அர்ச்சாவதாரங்களிலும் அன்பர்கள் பல்லாண்டு பாடுவதனாலேயே [அதாவது மங்களாசாஸனம் செய்வதனாலேயே] தனக்கு ரக்ஷணமுண்டாவதாக நினைப்பவனையென்பதில் எம்பெருமானார் தர்சனத்தவர்களுக்கு விவாதமோ ஸந்தேஹமோ இராது. விபவத்தில் *தத் தே பவது மங்களம்* *யாம் ஓஷதிமிவாயுஷ்மந்!* இத்யாதி மங்களாசாஸனத்தினாலேயே பகவானுக்கு அநிஷ்ட நிவ்ருத்தியுண்டானதாக ஆசாரியர்கள் நிர்வஹிக்கக் காண்கிறோம். "அந்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் ந சேச்சதி ஜநார்தந:" என்கிற ஸஞ்ஜயருடைய வாக்யத்தில் குசல ஸம்ப்ரச்நம் என்பது காப்பிடுகையாம். அர்ச்சையில் திருப்பல்லாண்டு பாடுவது அவன்றன் திருவுள்ளத்தை யடியொற்றியேயன்றோ அமைந்தது. திருவாய்ப்பாடியில் வீதிகளிலே ஸ்வைரவிஹாரம் பண்ணித்திரிகிற கண்ணபிரானை நோக்கி யசோதை கூறுகின்றாள் *காப்பாருமில்லை கடல்வண்ணாவுன்னைத் தனியேபோய் எங்கும்திரிதி* என்று. *காக்குமியல்வினன் கண்ணபெருமானென்று யசோதை அறிந்திருக்கக்கூடும். ஆயினும் 'கடல் வண்ணா!' என்னும்படியான வடிவழகைக் கண்டவாறே அவனுடைய ரக்ஷகத்வத்தை மறந்து ரக்ஷ்யனே இவனென்று ப்ரதிபத்திபண்ணியன்றோ 'காப்பாருமில்லை கடல்வண்ணாவுன்னை' என்றாள். ஆக இவனே ஸர்வ ரக்ஷகனென்று உணர்வது பரமார்த்தவுணர்வன்று; நந்தகோபர் அப்படி யுணர்ந்திருந்தாராகில் இவனுக்குத் தாம் ரக்ஷையிட்டிருக்கவேமாட்டார். நாம் ரக்ஷையிட்டாலன்றி இவன் அபாயமற்றிருக்க மாட்டானென்று உள்ளபடி உணர்ந்ததனாலேயே ரக்ஷையிட்டார். தீக்ஷிதர் இச்சுவைப் பொருளையுணருங் குடியிலே பிறந்திலராதலால் இப்பரமார்த்தம் அவர்க்கு ஸ்புரியாதது வியப்பன்று கிடீர். ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்க்கும் ஸ்புரிக்கவில்லையே! மற்றோரிடம் செல்வோம்.

## 131. அவ்விடத்திலேயே பதினாறுவது சுலோகம்.

*விச்வாநி விச்வாதிகசக்திரேகோ நாமாநி ரூபாணி ச நிர்மிமாண:,
நாமைகதேசக்ரஹணேபி மாதுர் பபூவ க்ருஷ்ணோ பஹுமாநபாத்ரம்.* என்பது.

சிறுபிள்ளைகள் வார்த்தை சொல்லத் தொடங்கும்போது அவரவர்களின் பெயர்களைப் பூர்த்தியாகச் சொல்லமாட்டாமல் அரைகுறையாகச் சொல்வது இயல்பு. ஸ்ரீக்ருஷ்ணகிசோரனும் உற்றுருறவினர் தோழன்மார் முதலானேருடைய நாமங்களைக் கொச்சையாகச் சொல்லச் செய்தேயும் தாய்க்கு உள்ளம் பூரித்து விட்டது—என்கிறது. இங்கு இவ்வர்த்தம் அனைவர்க்கும் எளிதாகத் தெரியக்கூடியதேயாம். தீக்ஷிதர் இங்கு வியாக்கியானிப்பதாவது—''மாது: யசோதாயா: நாமைகதேசக்ரஹணேபி அஹோ மாதுர் நாம க்ருஷ்ணேதி வாத்ஸல்யவதாம் பந்தூநாம் ச்லாகாவிஷய: அபூத் இத்யர்த்த:'' என்று; இவ்விடத்திற்கு இதுவா பொருள்! ''மாதுர் பபூவ க்ருஷ்ணோ பஹுமாநபாத்ரம்'' என்றுள்ள மூலத்தை அந்தோ! ஒடித்திட்டாரே! உலகத்தில் சிறுபிள்ளைகள் செய்யும் நாமைகதேச க்ரஹணம் தாய் விஷயத்தில் மட்டுமன்றே; கண்ணபிரானும் தாய் விஷயத்தில் மட்டும் அதுசெய்ததாக ச்லோகத்தில் சொல்லியிருக்கவில்லை. ''மாது: பஹுமாநபாத்ரம் பபூவ'' என்று நேரே அந்வயித்து வியாக்கியானிக்க ப்ராப்தமாயிருக்க அதைவிட்டு ''மாது: நாமைகதேச க்ரஹணேபி'' என்று அஸ்தாநே அந்வயங்காட்டி, ச்லோகத்திலில்லாத 'பந்தூநாம்' என்னுமொரு பதத்தை அநாவச்யமாகக் கொண்டு கூட்டி 'வாத்ஸல்யவதாம் பந்தூநாம் ச்லாகாவிஷயோபூத்'' என்று முடித்திருப்பது விரஸமென்பதை விவேகிகள் உணர்வார்கள். இங்கும் ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர் இந்தச் சுவைக்கேட்டைத் தவிர்த்திலர். அவ்வளவேயன்றி மாதாவை சோதர என்றுமென்கிருர். பண்டிதர்களா இப்படி எழுதுவது?

**132.** அவ்விடத்திலேயே முப்பத்துநான்காவதுசுலோகம்.

ஆநீதமக்ரே நிஜபந்தநார்த்தம் தாமாகிலம் ஸம்ஹிதமப்யபூர்ணம்,
விலோக்ய நிர்விண்ணஹியோ ஜநந்யா ஸ்ஸங்கோசசக்த்யா ஸ பபூவ பத்ய:

கண்ணபிரான் வெண்ணெய் களவுகாண்பது முதலான தீம்புகள் செய்வது கண்ட யசோதைப்பிராட்டி அவனை உரலிலே கட்டிவைக்கக் கருதியதை முந்தின ச்லோகத்தில் சொல்லி, இந்த சுலோகத்தில் அவன் கட்டுண்டபடியை வெகு சமத்காரமாகச் சொல்லுகிருர். தீக்ஷிதருடைய வியாக்யானத்திற்கு நிலமல்லாத சுவைகளை இங்கு விவரிக்கிறேன். [அகிலம் தாம ஸம்ஹிதமபி அபூர்ணம் விலோக்ய] கண்ணபிரான் வெண்ணெய் களவுகண்டானென்று யாவரும் கேட்டிருக்கிறீர்கள். ஆசிரியரும் இங்கு முந்தின சுலோகத்தில் ''முஹு: ப்ரவ்ருத்தம் நவநீத சௌர்யே'' என்று ஸாதித்துள்ளார். கண்ணனுக்கு வெண்ணெய் வேணுமானல் அதைத் திருடியுண்ணவேணுமோ? யாரைக் கேட்டாலும் கொள்ளை கொள்ளையாக அள்ளிக் கொடுக்கக் காத்திருக்கிருர்களே! கிடைக்கமாட்டாதவிடத்திலன்றே களவு செய்ய வேண்டும்; எளிதாகக் கிடைக்குமிடத்தில் எதற்காகக் களவு செய்தானென்று விமர்சிக்கவேணும்; உண்மை கேண்மின்; வெண்ணெயிலாசையென்பது வ்யாஜம்; கட்டுண்டிருந்து தன்னுடைய அத்யந்தஸௌலப்ய குணத்தைக்காட்டியுகக்க வேணுமென்பது முக்கியமான ஆசை. திருநாட்டில் காட்டமுடியாத இத்தகைய நிருக்குணங்களைக் காட்டுதற்கேயன்றே முக்கியமாக இங்குத் திருவவதரித்தது. ஆக, கட்டுண்டு கிடக்கையாகிற பெருங் குணத்தைக் காட்ட வேண்டியே

களவு செய்தான்., பிறரிடம்கேட்டு வாங்கியுண்டானாகில் கட்டியடிக்க ப்ரஸக்தி யில்லையன்றோ. கண்ணனுடைய சிறுச்சேவகங்கள் பலவிதம். சிலசமயங்களில் களவு செய்துவிட்டுத் தாய்க்குப் பிடி கொடாமலே 'தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடி' என்கிறபடியே ஓடிப்போவதுமுண்டு. தாய்கையில் பிடிபட்டும் அவளால் கட்டமுடியாதபடி செய்துகொள்வதுமுண்டு. அதற்காகக் கண்ணன் வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டுதுண்டாக அறுத்து வைத்திட்டுக் களவு செய்யப் புகுவான். அப்போது யசோதையின் கைக்கு வேணுமென்றே அகப்படுவான். அவள் இவனை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் கயிறுகளை யெடுக்கப்போவாள்; அது ஏற்கெனவே இவனால் துண்டு துண்டாக்கப்பட்டிருந்தபடியாலே அதுகொண்டு எளிதாகக் கட்டமுடியாமல் அவற்றை ஒன்றோடொன்று முடி போட்டுக் கட்டப்பார்ப்பள். ஐந்தாறு சுற்றுக்குப்போதும்படி வெகு நீளமாக்கிப் பிறகு கட்டப்புகுவள். அப்போது இவன் "பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்" (திருச்சந்தவிருத்தம்) என்கிறபடியே ஒருக்ஷணத்தில் தன்னுடலைப் பெருக்கிக்கொண்டு அந்தப் பெரிய கயிறு ஒரு சுற்றுக்கும் போராதபடி செய்துவிடுவன். அதுகண்ட யசோதை வெகுநாழிகை தான்பட்ட பரிச்ரமம் பழுதாயிற்றேயென்று வருந்தி இவனை விட்டுத் தொலைப்போமென்று நினைப்பள். கண்ணன் அந்த நினைவையறிந்தவாறே 'நாம் கட்டுண்டுகிடந்து காட்டவேணுமென்று நினைத்த பெருங்குணத்தை இழந்து விடலாமோ!' என்றெண்ணி உடனே "சுருக்குவாரையின்றியே சுருங்கினாய்" என்கிறபடியே முன்பு ஒரு சுற்றுக்குப்போராதிருந்த கயிறு பத்தெட்டு சுற்றுக்குப் போரும்படியாகத் தன்னை "அணோரணீயானாக ஆக்கிக் கொண்டானாம். இதை [ஸங்கோச சக்த்யா ஸ பூர்வ பத்ய:] என்பதனால் ஆசிரியர் காட்டியருளினார். ஆழ்வார்கள் பலரும் "கட்டுண்டிருந்தானென்றும்" "உரலோடாப்புண்டிருந்தானென்றுமே அருளிச்செய்தார்கள். மதுரகவிகள் ஒருவரே "கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்" என்று தன்னைத் தானே கட்டுண்டவனாம்படி செய்து கொண்டானென்றார். அதை அடியொற்றியாயிற்று ஆசிரியர் இங்ஙனே ச்லோகமிட்டபடி. 'தம் பபந்த' என்னாதே 'ஸ பூர்வ பத்ய:' என்ற சொல்லழகு காண்க. தீக்ஷிதர் காண வழியேது?

"நாமாகிலம் ஸம்ஹிதமபி" என்ற இவ்விடத்தில் வடமொழி வேதத்தின் மருமமொன்று கேண்மின். வேதத்தில் ஸம்ஹிதை பதம் க்ரமம் என்று மூன்றுண்டு நெடுக தண்டாகாரமாக ஓதிப்போருவது ஸம்ஹிதை. அதைத் துண்டுதுண்டாக்கி யோதுவது பதம். அந்த பதங்களை ஒன்றோடொன்று பிணைத்து ஓதுவது க்ரமம். நெடுகச்சென்றால் அது ஸம்ஹிதையாய்விடும். யசோதை நீளமாக வைத்திருந்த கயிறு ஸம்ஹிதாவஸ்தை; கண்ணன் அதைத் துண்டுதுண்டாக்கினது பதாவஸ்தை; யசோதை அந்தத்துண்டுகளைப் பிணைத்தது க்ரமாவஸ்தை; அது பர்யாயேண ஸம்ஹிதாவஸ்தைக்கு வந்துவிடுமன்றோ. அப்படிச் செய்தும் எட்டம் போதவில்லையென்பது [நாமாகிலம் ஸம்ஹிதமபி] என்பதில் உள்ளுறையும் மருமம். க்ரதிதம் என்றோ ப்ரக்ரதிதம் என்றோ கூறாமல் ஸம்ஹித மென்ற ஆசிரியர்க்கு இந்த விவரணமன்றோ பரம போக்யமாகும். வேதவைதேசிகரென்று ப்ரஸித்தரான தீக்ஷிதர்க்கும் ப்ரக்ருத டிப்பணகாரருக்கும் இது நிலமன்றே!

## 133. அதிலேயே 4-126 காளியமர்த்தன கதையைச் சொல்லும் ச்லோகம்

விவிதமுநிகணோபஜீவ்ய தீர்த்நா விகமிதஸர்ப்பகணா பரேண பும்ஸா
அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமிதபஹிர்மதஸம்ப்லவா த்ரயீவ.

யமுனையாற்றில் ஒரு மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளிய னென்னும் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை இந்த ச்லோகத்தினால் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ண பிரானுன ராமாநுஜன் செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனே யென்னில், ஐந்தலைவாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்த தானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம்போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிதாகப் பருகும்படி செய்ததானது— ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களையகற்றி நல்லபொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனை யாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது. காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள்; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானர் கொள்ளப்பட்டார். "தூய பெருநீர் யமுனைத்துறைவனை" என் னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்தது போல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதி களைக் காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப் படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தா னென்று புராணங்கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர் வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றார்கள்; எங்ஙனே யென்னில்: (1) ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம். (2) ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமா னத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்த்ரத்தினால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம். (3) சாஸ்த்ரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீ கரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் விபூதியும் இல்லையென்பது வேறொரு குத்ஸிதவாதம். (4) ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை. பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம். (5) பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக்கெடுத்த குதர்க்க வாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக் கெடுதல்களை யெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் அநேக ஸதர்த்த நிரு

பணங்களினாலே போக்கியருளினர். இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். *வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார்* என்று சூடிக்கொடுத்த சுடர்க் கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல், ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் *நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே* என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததந்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதி நாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பத மதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸ்துதி ஸூக்திப்படியும் காளியஸமர்களின் தலைமேல் நடனம் செய்வோம். ஸத்யமாக தேசிகன் திருவுள்ளத்திலுறைந்த அர்த்தங்களையே இங்கு நாம் விவரித்தோம். இவ்வர்த்தங்களை தீக்ஷிதர் வியாக்கியானிக்க ப்ரஸக்தியேது? காளியஸ்தானத்தில் நிற்பவரன்றோ அவர். தமிழுரையாசிரியர் ஸ்ரீ வைஷ்ணவபண்டிதராயிருந்து இப்பொருள்களை லவலேசமும் காட்டாமல், (யமுநா) என்பதற்கு "வேதமூர்த்தியான ஸூர்யனின் பெண்ணான யமுனையானது" என்று உரையெழுதி வெகு விசேஷார்த்தம் ஸாதித்துவிட்டதாக அபிமானிக்கிறார்.



**134.** *அதிலேயே முதல் ஸர்க்கத்தின் முடிவு சுலோகம்.*

"ஆச்வாஸ்ய வாக்ம்ருதவ்ருஷ்டிபிராதிதேயாந்
தைதேயபாரநமிதாம் தரணீஞ்ச தேவீம்,
ஆவிர்ப்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம்
பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா:" என்பதாம்.



தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எம்பெருமான் தேவகிப் பிராட்டியாரிடம் திருவவதாரம் செய்து தனது திருவருளைப் பிரகாசிப்பிக்கத் திருவுள்ளம் பற்றினபடியைச் சொல்லுவது இந்த சுலோகம். இதில் உத்தரார்த்தத்தில் (ஆவிர்புபூஷு:) என்றவுடனே (அநக:) என்றொரு விசேஷணமுள்ளது. தோஷமற்றவன் என்பது இதன் பொருள். அகில ஹேயப்ரத்யநீகனென்றபடி. எம்பெருமானுக்கு தோஷமில்லாமையை அந்தந்த ப்ரகரணங்களுக்குத் தக்கபடி உபபாதிக்க வேண்டும். ப்ரக்ருதத்தில், ஆவிர்புபூஷு: — அவதரிக்கத் திருவுள்ளம் பற்றினான் என்று சொல்லி, உடனே அநக: — அவத்யமில்லாதவன் என்றமையால், அஸ்மதாதிகளின் பிறப்புக்கு நல்வினை தீவினைகளாகிற கருமம் காரணமாகிருப்போலே பகவானுடைய அவதாரத்திற்கும் கருமம் காரணமாகிறதோவென்று சங்கிக்க நேருமன்றோ. அவ்விதமான பிறப்பாகில் அது அவத்யமேயாகுமன்றோ. பகவான் கருமம் காரணமாக வன்றிக்கே கேவலம் கருணையே காரணமாக அவதரிக்கின்றானாகையாலே அத்தகைய அவத்யத்திற்கு அவகாசமில்லையென்பது இங்கு விவக்ஷிதம். அலங்கார சாஸ்த்ரத்தில் பரிகரமென்று ஓர் அலங்காரம் சொல்லிற்று. *அலங்கார: பரிகர: ஸாபிப்ராயே விசேஷணே* என்று அதன் லக்ஷணமும் சொல்லிற்று. ஒருகருத்தோடு விசேஷணமிட்டால் அங்கு பரிகராலங்காரமென்றபடி. இவ்வலங்காரமே ஆசிரியரால் இங்கு உத்தேசிக்கப்பட்டது. அதை ஆசிரியர் தாமே நான்காவது பாதத்தினால் [*பத்மாபதி:

ப்ரணிததே ஸமயம் தயாயா: "என்பதனுல்] விளக்கியருளினர். ஆக 'அநக' என்பதற்கு—கர்மவச்யனுகிப் பிறவாதவனுகையாலே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன் என்பதே இங்கு ஆசிரியர் திருவுள்ளம்பற்றின பொருளாகும்.

வியாக்கியான கர்த்தாவான அப்பயதீக்ஷிதர் இங்கு "அநக:—நிரவத்ய:; தத்தத் கர்மாநுரோதிதயா வைஷம்யநைர்க்ருண்ய தோஷரஹித:–" என்றெழுதியுள்ளார். அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களையொட்டிப் பலன் கொடுப்பவனுகையாலே வைஷம்யநைர்க்ருண்யமாகிற தோஷமில்லாதவன்—என்பது இந்த வாக்கியத்தின் பொருள். பகவான் உலகங்களைப் படைக்குங்காலத்திலே இப்படிப் பட்ட தோஷசங்கையும் தத்பரிஹாரமும் சாரீரகமீமாம்ஸையில் "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிற ஸூத்ரத்திலேறியுள்ளது. பட்டரும் ஸ்ரீரங்கராஜ ஸ்தவ—உத்தரசதகத்தில் "நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந்!, வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவா: ச்ருதயோ க்ருணந்தி" என்கிற ச்லோகத்தினுல் இதனை விசதீகரித்தருளினுர். அங்கு அதற்கு முன் சுலோகத்தில் ("அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத:" இத்யாதியில்) ஸ்ருஷ்டிப்ரஸ்தாவம் உள்ளபடியினுல் அடுத்த சுலோகம் அங்ஙனே அமையவேண்டியதாயிற்று. இங்கு ஸ்ருஷ்டிப்ரஸ்தாவமில்லை. அவதாரப்ரஸ்தாவமேயுள்ளது. இதற்குச் சேர 'கர்மவச்யத்வமாகிற தோஷமற்றவன்' என்னும் பொருளே பொருந்தும். மற்றுமிப்புடையிலே வேறு வகையான பொருளும் பகரலாமேயல்லது வைஷம்யநைர்க்ருண்ய தோஷமற்றவன் என்னும் பொருள் ஸர்வாத்மநா இங்கு அப்ரஸக்தம். இங்கு ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதருடைய டிப்பணத்திலும் விசேஷம் காண்கின்றிலோம்.



## 135. யாதவாப்யுதயத்திலே நாலாவது ஸர்க்கத்திலே (28)

"த்ரஸ்யந் முகுந்தே நவநீத சௌர்யாத் நிர்ப்புக்நகாத்ரோ நிப்ருதம் சயாந:
நிஜாநி நிச்சப்ததசாம் யயாசே பத்த்வாஞ்ஜலிம் பாவவிபூஷணுநி."

என்பதொரு ச்லோகம். சிறிய திருமடலில் "ஆங்கொருநாளாய்ப்பாடி, சீரார்கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய், வாரார்வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு .........சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார்நுதல்மடவாள் வேறேர்கலத்திட்டு, நாராருறியேற்றி நன்கமையவைத்ததனைப் போரார் வேற்கண் மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம், ஓராதவன் போலுறங்கியறிவுற்றுத், தாரார் தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி ஆராதவெண்ணெய் விழுங்கி, அருகிருந்த மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே, ஓராதவன்போல் கிடந்தான்" என்றதையும் மற்றும் சில பாசுரங்களையும் திருவுள்ளத்திற்கொண்டு இந்த ச்லோகமருளிச் செய்திருக்கிறுர் ஸ்வாமி. இதன் சுவைமிக்க பொருள்களை இங்கு நான் விவரிக்கப் புகவில்லை. இவுருரையில் வருந்தத்தக்கதொன்றைமட்டும் காட்டுகிறேன்.

மேலே காட்டின சுலோகத்தில் உத்தரார்த்தத்தில் "யயாசே பத்த்வா அஞ்ஜலிம் விபூஷணுநி" என்றிருக்கிறது. கைகூப்பிக்கொண்டு யாசித்தானென்று எளிதாகப் பொருள்படாநிற்க, தீக்ஷிதரும் இப்படியே அந்வயித்து உரைத்திருக்க, (அஞ்ஜலிம் பத்த்வா) என்றதைப் பூர்வார்த்தத்திலே கொண்டுபோய் (அஞ்ஜலிம் பத்த்வா சயாந:) அஞ்சி உடலை ஒடுக்கிக் கொண்டு அசையாமல் ஓரிடத்தில் கைகளைக் குவித்துக்

கொண்டு கவிழ்ந்து படுத்தவனானன்—என்றெழுதுகிறார் தமிழுரைகாரர். இது கண் விழித்துக்கொண்டு எழுதினதா? கண்ணுறங்கிக்கொண்டே யெழுதினதா? என்று தெரியவில்லை. "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்று ஸ்ரீராமாயணத்தில் சொன்ன ஸமுத்ர திரசயனமா இது? ஒவ்வொருவரும் ச்லோகத்தையும் உரையையும் வாசித்துப் பார்க்கவேணும். சற்று ஊன்றிப் பார்க்க வேண்டா; மேலெழப்பார்த்தாலும் போதுமே!

## 136. ஆறுவது ஸர்க்கத்தில் (ச்லோ-4.)

அதியஜேத நிஜாம் யதி தேவதாம் உபயத: ச்யவதே ஜுஷதேப்யகம்,
க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம் வநமிஹாநவதா கிமஹித்ருஹா. என்பது.

இடையர்கள் வழக்கமாக இந்திரனுக்குப் பூஜை செய்துகொண்டிருந்ததைக் கண்ணபிரான் விலக்கி, அந்தப் பூஜையை மலைக்கு இடும்படி நியமிக்கும் பிரகரணத்திலுள்ள சுலோகமிது. ப்ரத்யக்ஷமாக நம்மையும் பசுக்களையும் ரக்ஷிக்கின்ற மலையைவிட்டு, ரக்ஷிக்கமாட்டாதவனான இந்திரனைப் பூஜிப்பதனால் என்ன பயன்? என்பது இங்குக் கூறப்படுகிறது. இந்திரனாலே என்னும் பொருளுடையதான (அஹித்ருஹா) என்கிற பதத்திற்கு தீக்ஷிதருமெழுதாதவொரு விசேஷார்த்தமெழுதுகிறார் தமிழுரைகாரர்; 

"அஸுரோபி வ்ருத்ரோ பாகவத இதி தத்த்ரோஹோ ந யுக்த இதி பாவ:" வ்ருத்ரன் அஸுரனானாலும் அவன் பகவத்பக்தனானகையாலே அவனைக் கொன்றது தவறு என்று பாவம்"—என்றெழுதப்பட்டுள்ளது. "என்று பாவம்" என்றது யாருடைய பாவமோ? இந்தப் பாவம் இங்கு எதற்காகத் தெரிவிக்கப்படுகிறதோ தெரியவில்லை. பெரியாழ்வார் "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்று கண்ணன் கதையொன்று அருளிச்செய்கிறார். மாலிகன், தனக்குத் தோழனாயிருக்க அவனைத் தலையறுத்தது தப்பு என்று பாவம் — என்றெழுதியிருப்பர் போலும். இந்திரன் வ்ருத்ரனைக்கொன்றது தவறாகையாலே அவனை ஆராதிக்கக்கூடாது என்கிறான் கண்ணன்—என்று பாவத்தை விவரிப்பர்போலும். இப்படி விரஸமான பொருள்கள் பலபல. 

[க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம்] என்றதற்குப் பதவுரையெழுதுகிறார்— "இம்மலையையே தேவதையாக நாம் உடையவராவோம்" என்று; இவ்வுரையினால் தெரிவதென்னவென்றால், இடையர்கள் இம்மலையைத் தேவதையாகக் கொள்ள மாட்டோம் என்று சொல்லுவதாகவும், அது பிசகு, நாம் இம்மலையையே தேவதையாகக்கொள்ள வேணுமென்று கண்ணன் வற்புறுத்துவதாகவுமே தெரியவரும். மூலத்திற்கு இதுவா பொருள்! இம்மலையையே நாம் தேவதையாகவுடையோம், தேவதையாகக் கொண்டிருக்கிறோம்—என்றல்லவா பொருள். ஆவோம் என்பது எதிர்காலத்தில் ஸித்திக்கவேண்டிய விருப்பத்தைத் தெரிவிக்குமதென்பதை அந்தோ அறிந்திலர். "எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம்" என்கிற திருப்பாவைப் பாசுரத்தைச் சிந்தனை செய்தாலும் போதும். "உன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்றாப்போல இம்மலையையே நாம் தேவதையாக வுடையராயிருக்கிறோம் என்னவேண்டும். (தொடரும்)